# நிர்வாணமஞ்ஜரீ

[ஆத்ம ஸம்பந்த மற்ற யாவும் தீபம் அணைவது போல அற்றுப்போன நிர்வாண நிலையின் அனுபவங்களை மஞ்ஜரீ எனும் பூங்கொத்துப் போலத் திரட்டித் தரும் ப்ரகரணம்]

**அஹம் நாமரோ நைவ மர்த்யோ ந தை3த்யோ**
**ந க3ந்த4ர்வ ரக்ஷ: பிசாச ப்ரபே4த3: |**
**புமான் நைவ ந ஸ்த்ரீ ததா2 நைவ ஷண்ட3:**
**ப்ரக்ருஷ்ட ப்ரகாச ஸ்வரூப: சிவோ(அ)ஹம் ||** 1

நான் தேவன் அல்ல, மனிதனும் அல்ல, அஸுரனும் அல்ல, கந்தர்வன் ராக்ஷஸன் பிசாசம் என்கிற வகுப்பில் சேர்ந்தவனும் அல்ல, ஆணும் அல்ல, பெண்ணும் அல்ல, அப்படியே அலியும் அல்ல. உத்தமமான ஞானத்தையே ஸ்வரூபமாயுடைய சிவ (மங்கள) ஸ்வரூபியான பரப்பிரஹ்மமே நான்.

**அஹம் நைவ பா2லோ யுவா நைவ வ்ருத்3தோ4**
**ந வர்ணீ ந ச ப்3ரஹ்மசாரீ க்2ருஹஸ்த2: |**
**வநஸ்தோ3(அ)பி நாஹம் ந ஸந்யஸ்த த4ர்மா**
**ஜகஜ்ஜந்ம நாசைக ஹேது: சிவோ(அ)ஹம் ||** 2

நான் பாலனும் அல்ல. யுவாவும் அல்ல. கிழவனும் அல்ல, (பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என்கிற நான்கு) வர்ணங்களில் சேர்ந்தவனுமல்ல, (பிரஹ்மசாரீ, கிருஹஸ்தன். வானப்பிரஸ்தன் ஸன்னியாஸி என்கிற நான்கு ஆசிரமங்களில்) பிரஹ்மசாரீ, கிருஹஸ்தனும் அல்ல, வானப்பிரஸ்தனும் அல்ல. எல்லாக் கர்மாக்களையும் விட்ட ஸன்னியாஸியும் அல்ல. பிரபஞ்சத்தின் உற்பத்திக்கும் நாசத்திற்கும் ஒரே காரணமாயிருக்கிற மங்கள ரூபியான பரப் பிரஹ்மமே நான்.

**அஹம் நைவ மேயஸ் - தி2ரோபூ4த - மாய:**
**ததை2வேக்ஷிதும் மாம் ப்ருத2ங் - நாஸ்த்யுபாய: |**
**ஸமாச்லிஷ்ட - காய - த்ரயோ(அ)ப்யத்3விதீய:**
**ஸதா3(அ)தீந்த்3ரிய: ஸர்வரூப: சிவோ(அ)ஹம் ||** 3

நான் பிரமாணங்களினால் அறியக்கூடியவன் அல்ல, மாயையினால் மறைக்கப்பட்டவனும் இல்லை. என்னை அறிவதற்கு வேறு தனியாக உபாயம் கிடையாது. ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்கிற மூன்று சரீரங்களால் நன்கு சூழப்பட்டவனாயிருந்தபோதிலும், இரண்டாவதென்பது இல்லாததாய் எப்பொழுதும் இந்திரியங்களுக்கு எட்டாததாய் எல்லா வஸ்து ஸ்வரூபமாக இருக்கும் மங்கள ஸ்வரூபியான பரப்பிரஹ்மமே நான்.

**அஹம் நைவ மந்தா ந க3ந்தா ந வக்தா**
**ந கர்தா ந போ4க்தா ந முக்தாச்ரமஸ்த2: ।**
**யதா2(அ)ஹம் மநோவ்ருத்தி பே4த2 ஸ்வரூப:**
**ததா2 ஸர்வவ்ருத்தி ப்ரதீ3ப: சிவோ(அ)ஹம் ॥** 4

நான் (மனஸினால்) ஆலோசிக்கிறவன் அல்ல, (காலால்) நடக்கிறவன் அல்ல, (வாயால்) பேசுகிறவன் அல்ல, (கர்மேந்திரியங்களால்) வேலை செய்கிறவன் அல்ல, (போக ஸாதனங்களால் ஸுகதுக்கங்களை) அனுபவிக்கிறவன் அல்ல. (ஸம்ஸார பந்தத்திலிருந்து) விடுபட்டவனுடைய நிலையில் இருப்பவனும் அல்ல, எப்படி நான் மனஸினுடைய விருத்திகளின் வேற்றுமையைத் தன் ரூபமாக வைத்துக் கொண்டிருக்கிறேனோ, அப்படியே எல்லா விருத்திகளையும் பிரகாசிக்கும் படிச் செய்யும் வெளிச்சமாயுள்ள மங்கள ஸ்வரூபமான பரப்பிரஹ்மமாகவும் இருக்கிறேன்.

**ந மே லோக யாத்ரா ப்ரவாஹ ப்ரவ்ருத்தி:**
**ந மே ப3ந்த4 - பு3த்2த்4யா து3ரீஹா நிவ்ருத்தி: ।**
**ப்ரவ்ருத்திர் நிவ்ருத்த்யா(அ)ஸ்ய சித்தஸ்ய வ்ருத்திர்**
**யதஸ்த்வந்வஹம் தத்ஸ்வரூப: சிவோ(அ)ஹம் ॥** 5

எனக்கு உலக யாத்திரை தொடர்ந்து நடப்பதற்கான பிரவிருத்தியும் கிடையாது, கட்டுப்படுத்தி விடுமே என்கிற எண்ணத்தினால் கெட்ட கார்யங்களி லிருந்து நிவிருத்தியும் கிடையாது. நிவிருத்தியோடு பிரவிருத்தியும் இந்த மனத்தினுடைய வேலையாயிருப்பது எதனால் ஏற்படுகிறதோ, அந்த ஸ்வரூப மாயுள்ள மங்கள ரூபியான பரப்பிரஹ்மமாக நான் எப்பொழுதும் இருக்கிறேன்.

**நிதா3நம் யத3ஜ்ஞாந - கார்யஸ்ய கார்யம்**
**விநா யஸ்ய ஸத்த்வம் ஸ்வதோ நைவ பா4தி ।**
**யதா3த்4யந்த மத்4யாந்தராளாந்தராள**
**ப்ரகாசாத்மகம் ஸ்யாத் ததே3வாஹமஸ்மி ॥** 6

எது அஜ்ஞானத்தினால் ஏற்பட்ட (பிரபஞ்சம் முதலான) கார்ய பதார்த்தங் களுக்கெல்லாம் மூலகாரணமோ, எதனுடைய இருப்பானது கார்ய பதார்த்தங்க ளன்னியில் தானாகவே தோன்றுகிறதிலலையோ, எது (எல்லாவற்றிலும்) முதலிலும் முடிவிலும் நடுவிலும் மத்தியிலுள்ள இடுக்குகளிலும் பிரகாச ஸ்வரூபமாகவே இருக்கிறதோ, அதுவே நானாக இருக்கிறேன்.

**யதோ(அ)ஹம் ந பு2த்2தி4ர் ந மே கார்ய ஸித்3தி4:**
**யதோ நாஹமங்க3ம் ந மே லிங்க3 ப4ங்க2: ।**
**ஹ்ருதா3காசவர்தீ க3தாங்க3த்ரயார்தி:**
**ஸதா3 ஸச்சிதாநந்த மூர்தி: சிவோ(அ)ஹம் ॥** 7

நான் புத்தியல்லவாதலால் எனக்கு செய்து முடிக்க வேண்டியதென்பது கிடையாது. நான் சரீரமல்லவாதலால் ஸூக்ஷ்ம சரீரத்திற்கு ஏற்படும் கெடுதல் எனக்கு இல்லை. ஹ்ருதயாகாசத்தில் எப்பொழுதும் இருப்பதாய் (ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற) மூன்று சரீரங்களினுடைய துன்பத்திலிருந்து விலகினதாய் ஸச்சிதானந்த ஸ்வ ரூபமாக இருக்கும் மங்கள ரூபியான பரப் பிரஹ்மமே நான்.

**யதா3ஸீத்3 விலாஸாத்3 - விகாரோ ஜக3த்3- யத்3**
**விகாராச்ரயோ நாத்3விதீயத்வத: ஸ்யாத் ।**
**மநோ பு2த்தி4 சித்தாஹமாகார வ்ருத்தி**
**ப்ரவ்ருத்திர் யத: ஸ்யாத் ததே3வாஹமஸ்மி ॥ 8**

எது விலஸிக்கும் போது (மலர்வதினால்) பிரபஞ்சமென்ற மாறுதலாக ஏற்பட்டதோ, (அப்படியிருந்தும்) எது இரண்டாவதற்றதென்ற காரணத்தினால் மாறுதலுக்கு இடமாக ஆகிறதில்லையோ, எதனால் மனஸ் புத்தி சித்தம் அஹங்காரம் என்று பிரிவுபட்டுள்ள அந்தக்கரண விருத்திகளுக்கு பிர விருத்தி ஏற்படுகிறதோ, அதுவே நான்.

**யத3ந்தர் - ப3ஹிர் வ்யாபகம் நித்ய சுத்3த4ம்**
**யதே3கம் ஸதா4 ஸச்சிதாநந்த3 கந்த3ம் ।**
**யத: ஸ்தூ2ல ஸூக்ஷ்ம ப்ரபஞ்சஸ்ய பா4நம்**
**யதஸ்தத் ப்ரஸூதிஸ் - ததே3வாஹமஸ்மி ॥ 9**

எது உள்ளேயும் வெளியிலும் வியாபகமாயும் எப்பொழுதும் சுத்தமாயும் இருக்கிறதோ, எது எப்பொழுதும் ஒன்றாகவே இருந்துக் கொண்டு, ஸத்தாயம் - சித்தாயும் ஆனந்தமாயுமுளளதோ, எதனால் ஸ்தூல பிரபஞ்சம், ஸூக்ஷ்ம பிரபஞ்சம் - இவைகளுடைய தோற்றம் (ஏற்படுகிறதோ), எதிலிருந்து அந்தப் பிரபஞ்சங்களின் உற்பத்தியோ அதுவே நான்.

**யத3ர்கேந்து3 வித்3யுத் ப்ரபா4 ஜால மாலா**
**விலாஸாஸ்பத3ம் யத் ஸ்வபே4தா3தி3 சூந்யம் ।**
**ஸமஸ்தம் ஜகத் யஸ்ய பாதா3த்மகம் ஸ்யாத்**
**யத: சக்திபா4நம் ததே3வாஹமஸ்மி ॥ 10**

எது ஸூர்யன் சந்திரன் மின்னல் இவைகளின் பிரகாசக்கூட்ட வரிசைகள் விளங்குவதற்குக் காரணமோ, எது தன்னுள் பேதம் முதலான (தனக்குள்ளேயே கைகால்கள் மாதிரியுள்ள ஸ்வகதபேதம், தனக்கு ஸமாநமான வேறொரு பதார்த்தத்திலிருந்து வேறுபடுதலாகிய ஸஜாதீய பேதம், தனக்கு விலக்ஷணமா யுள்ள பதார்த்தங்களிலிருந்து வேறுபடுதலாகிய விஜாதீய பேதம் ஆகிய மூன்று) பேதங்களும் அற்றதோ, எதனுடைய பாதஸ்வரூபமாகவே ஸகல ஜகத்தும் ஆகுமோ, எதனால் சக்தியினுடைய தோற்றம் ஏற்படுகிறதோ, அதுவே நான்.

**யத: கால ம்ருத்யுர் பி3பே4தி ப்ரகாமம்**
**யதச்சித்த பு3த்3தீ4ந்த்ரியாணாம் விலாஸ: ।**
**ஹரி ப்4ரஹ்ம ருத்3ரேந்த்ர சந்த்3ராதி3 நாம**
**ப்ரகாசோ யத: ஸ்யாத் ததே3வாஹமஸ்மி ॥** 11

எதனிடம் காலமிருத்யுவும் மிகவும் பயப்படுகிறாரோ, எதனால் சித்தம் புத்தி இந்திரியங்கள் இவைகளுக்கு பிரகாசம் ஏற்படுகிறதோ, எதனால் விஷ்ணு பிரஹ்மா, ருத்ரன் இந்திரன் சந்திரன் முதலானவர்களுடைய பெயர்களுக்குப் பிரகாசம் ஏற்படுகிறதோ, அதுவே நான்.

**யதா3காசவத் ஸர்வக3ம் சாந்த ரூபம்**
**பரம் ஜ்யோதிராகார சூந்யம் வரேண்யம் ।**
**யதா3த்3யந்த சூந்யம் பரம் சங்கராக்3யம்**
**யத3ந்தர் விபா4வ்யம் ததேவாஹமஸ்மி ॥** 12

எது ஆகாசம் போல எல்லாவற்றிலும் வியாபித்துக்கொண்டு, அடங்கின ஸ்வரூபமுள்ளதாய், மேலான ஜ்யோதியாய், உருவமற்றதாய், சிலாகிக்கத் தக்கதாயிருக்கிறதோ, எது ஆதியும் அந்தமும் அற்றதாய், உத்கிருஷ்டமாய், க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய பெயருள்ளதாய் இருக்கிறதோ. எது உள்ளேயே நன்கு அனுபவிக்கத்தக்கதோ, அதுவே நான்.

